அருட்பெருஞ் ஜோதி ! அருட்பெருஞ் ஜோதி !
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ் ஜோதி !




# ஸ்ரீ ஜெகத்குரு அவர்களின் அனுபவ சித்தமருத்துவக்குறிப்புகள்



# ஸ்ரீ ஜெகத்குரு அவர்களின்

# அனுபவ சித்தமருத்துவக்குறிப்புகள்





## fh MEET -2017

சென்னையில் நடைபெற்ற
Food & Health WhatsApp குழு உறுப்பினர்களுக்கு
**ஸ்ரீ ஜெகத்குரு** அவர்களால்
வழங்கப்பட்ட மருத்துவ கையேடு.

**இந்த ஏடு விற்பனைகல்ல**



**அற்றது அறிந்து கடைப்பிடித்து மாறல்ல**
**துய்க்க துவரப் பசித்து.**

**( குறள் எண் : 944 )**

பொருள் :

முன் உண்ட உணவு, செரித்த தன்மையை அறிந்து, மாறுபாடில்லாத உணவுகளை கடைபிடித்து, அவற்றையும், பசித்த பின்பு உண்ண வேண்டும்.

# ஜெகத்குருவின் அனுபவ மருத்துவக் குறிப்புகள்

| நோயுறா வாழ்வு பெற விதிமுறைகள் | | |
|---|---|---|
| உணவுமுறை | **காலை** | ❖ கேழ்வரகுக்கஞ்சி அல்லது கூழ்<br>❖ உளுந்தங்கஞ்சி அல்லது உளுந்தங்களி<br>❖ இட்லி |
| உணவுமுறை | **மதியம்** | ❖ கீரை உணவுகள் - மணத்தக்காளி, கரிசலாங்கண்ணி, பொன்னாங்கண்ணி, முருங்கை சேர்த்துக் கொள்ளவும்.<br>❖ கருணைக் கிழங்கு புசிப்பது நன்று. |
| உணவுமுறை | **மாலை** | நெல்லி, அத்தி, நாவல் கனி வகைகள், பேரிச்சம்பழம் எடுத்துக் கொள்ளலாம். |
| உணவுமுறை | **இரவு** | எளிதில் ஜீரணமாகும் உணவுகளை எடுத்துக் கொள்ளவும். |
| உணவுமுறை | **தவிர்க்க** | ❖ டீ, காஃபி<br>❖ சர்க்கரை<br>❖ பாக்கட்டில் வரும் எண்ணெய்கள்<br>❖ அயோடைஸ்டு உப்பு<br>❖ மைதா உணவுகள்<br>❖ குளிர்பானங்கள்<br>❖ அசைவ உணவுகள்<br>❖ இரவு உணவில் தயிர், கீரை, முள்ளங்கி, குளிர்ச்சியான மற்றும் வாயு உணவுப் பொருட்களைத் தவிர்க்கவும் |
| உணவுமுறை | | ❖ நண்பகல் சுக்கு கசாயம் அருந்தவும்.<br>❖ சர்க்கரைக்கு மாற்றாக **நாட்டுச்சர்க்கரை** அல்லது **பனை வெல்லம்** பயன்படுத்தவும்).<br>❖ **செக்கில் ஆட்டிய நல்லெண்ணெய், கடலை எண்ணெய்** பயன்படுத்தவும்.<br>❖ **இந்துப்பு** பயன்படுத்தவும்<br>❖ **பட்டை தீட்டப்படாத கோதுமை** உணவுகள் எடுத்துக் கொள்ளவும்.<br>❖ **கரும்புச்சாறு, இளநீர், பதனீர்** அருந்தவும். |
| மருத்துவம் | **காலை (வெறும் வயிற்றில்)** | கரிசலாங்கண்ணிப்பொடி ஒரு பங்கு, தூதுவளைப்பொடி அரை பங்கு, முசுமுசுக்கைப்பொடி அரைப் பங்கு, சீரகம் கால் பங்கு, பனங்கற்கண்டு ஆகியவற்றை பசும்பாலில் அல்லது வெந்நீரில் கலந்து அருந்தவும். |
| மருத்துவம் | **இரவு** | திரிபலாச்சூரணம் ஒரு கரண்டி வெந்நீரில் கலந்து பருகவும். |
| மருத்துவம் | | ❖ வாரம் ஒரு முறை நல்லெண்ணெய் குளியல்<br>❖ மூன்று அல்லது ஆறு மாதங்களுக்கு ஒரு முறை குடல் சுத்தி செய்யவும்.<br>(காலை வெறும் வயிற்றில் ஒரு டம்ளர் வெந்நீரில் இரண்டு கரண்டி விளக்கெண்ணெய் கலந்து அருந்தவும்.பின் ஒரு மணி நேரத்திற்கு எந்த உணவும் உட்கொள்ள வேண்டாம். மேலும் அன்று முழுவதும் பழ வகைகள் மட்டுமே உண்ணவும்). |

| | | |
|---|---|---|
| | **1. நீரிழிவு நோயைக் கட்டுப்படுத்தும் வழிமுறைகள்** | |
| உணவுமுறை | **காலை** | சிறுதானிய உணவுகள் (கேழ்வரகு), கோதுமை கஞ்சி |
| | **மதியம்** | ❖ கீரை உணவு ( வாரம் 3 முறை )<br>❖ உணவில் மாப்பிள்ளை சம்பா அல்லது சிவப்புக்கவுனி அரிசி பயன்படுத்தவும். |
| | **இரவு** | சப்பாத்தி, சிறுதானிய உணவுகள் (கேழ்வரகு) |
| | **கனி வகைகள்** | நாவல் மற்றும் நெல்லி (வாழைப்பழம் தவிர்க்க)<br>**நாவல் பழம்** **நெல்லிக்காய்** |
| | **தவிர்க்க வேண்டியவை** | சர்க்கரை, டீ, காஃபி |
| மருத்துவம் | **காலை (வெறும் வயிற்றில்)** | அருகம்புல் சாறுடன் சிறிது மஞ்சள் தூள் கலந்து அருந்தவும். |
| | **காலை, மதியம் மற்றும் இரவு உணவுக்கு பின்** | சீந்தில் பொடி 100 கி.,முளைக்கட்டிய வெந்தயப்பொடி 100 கி.,நாவல் கொட்டைபொடி 100 கி வெந்நீரில் கலந்து வைத்துக் கொள்ளவும். இதனை 1 தேக்கரண்டி வெந்நீரில் கலந்து பருகவும்..<br>**சீந்தில் கொடி** **முளைகட்டிய வெந்தயம்** |
| | **மாலை** | 1 டம்ளர் நெல்லிச்சாற்றுடன் ½ தேக்கரண்டி மஞ்சள் தூள் கலந்து அருந்தவும் |
| | **இரவு** | கடுக்காய்ப்பொடி ½ தேக்கரண்டி, நித்யகல்யாணிப்பொடி ½ தேக்கரண்டி வெந்நீரில் கலந்து பருகவும்.<br>**கடுக்காய்** **நித்யகல்யாணி** |

| 2. உயர் இரத்த அழுத்தம் | | |
|---|---|---|
| உணவுமுறை | காலை & மாலை | ❖ முருங்கைக்கீரை சூப் (வாரம் 3 முறை)<br>❖ செம்பருத்திப்பூ கசாயம் - செம்பருத்திப்பூ - 3, சீரகம் - 1 தேக்கரண்டியுடன் பனங்கற்கண்டு சேர்த்து கொதிக்க வைக்கவும்.<br>❖ இஞ்சிக்கசாயம் - இஞ்சியுடன் சிறிது சீரகம் சேர்த்து கொதிக்க வைக்கவும்.<br>**முருங்கைக்கீரை** **செம்பருத்திப்பூ** **இஞ்சி** **சீரகம்** |
| | மதியம் | ❖ உணவில் முருங்கைக்கீரை சேர்க்கவும்.<br>❖ உணவில் இந்துப்பு பயன்படுத்தவும். |
| | இரவு | பூண்டுப்பால்<br>( **2 பல் பூண்டு, மஞ்சள் தூள், மிளகுத்தூள், பனங்கற்கண்டு கொதிக்கும் பாலில் இடவும்**)<br>**வெள்ளைப்பூண்டு** |
| | தவிர்க்க | டீ, காஃபி, அயோடனைஸ்டு உப்பு |



| 3. குறைந்த இரத்த அழுத்தம் | |
|---|---|
| உணவுமுறை | ❖ உப்பு உணவில் சிறிது கூடுதலாக சேர்த்துக் கொள்ளலாம்.<br>❖ கீரைச் சார்ந்த உணவுகள் (முருங்கை,பொன்னாங்கண்ணி)<br>❖ அத்திப்பழம் மற்றும் பேரிச்சம்பழம் உட்கொள்ளவும்.<br>**முருங்கைக்கீரை** **பொன்னாங்கண்ணி** **பேரிச்சம்பழம்** **அத்திப்பழம்** |

| 4. டைஃபாய்ட் குணமடைய | | |
|---|---|---|
| உணவு முறை | உப்பில்லா கஞ்சி ( **3** வேளை) | |
| மருத்துவம் | **காலை** | வெறும் வயிற்றில் பாலக்கீரை அல்லது பவளமல்லி அல்லது நிலவேம்புப் பொடி, கருஞ்சீரகம், பூண்டு, மிளகு கசாயம் அருந்தவும். **பாலக்கீரை** **பவளமல்லி** **நிலவேம்பு** |
| | **மதியம்** (12 மணி அளவில்) | பூண்டு, சுக்கு, மிளகு கசாயம் அருந்தவும். **பூண்டு** **சுக்கு** **மிளகு** |
| | **மாலை** | இளநீரில் எலுமிச்சை சாறு மற்றும் நசுக்கிய 3 பல் பூண்டை கலந்து அருந்தவும் **இளநீர்** **எலுமிச்சை** |
| | **இரவு** | பூண்டு பால் |

| 5. இரவில் குறட்டை நீங்க | |
|---|---|
| மருத்துவம் | இரவில் வெந்நீரில் ½ தேக்கரண்டி கசகசா பொடி கலந்து அருந்தவும். **கசகசா** |

## 6. சிறுநீரகக்கல் நீங்க

| | | |
|---|---|---|
| உணவுமுறை | **காலை** | இட்லி, தோசை |
| | **12 மணியளவில்** | முள்ளங்கிச்சாறு |
| | **மதியம்** | மஞ்சள் கரிசலாங்கண்ணி கீரை, பருப்புடன் உணவில் சேர்த்துக் கொள்ளவும். **மஞ்சள் கரிசலாங்கண்ணி** |
| | **மாலை (6 மணியளவில்)** | வாழைத்தண்டுச்சாறு |
| | **இரவு** | உணவு எடுத்துக் கொள்ள வேண்டாம். |
| | **தவிர்க்க வேண்டியவை** | இரவு உணவு<br>டீ, காஃபி, அதிக காரம், புளிப்பு, உப்பு தவிர்க்கவும். |
| மருத்துவம் | ❖ தர்பை புல்லை நீரில் கொதிக்க வைத்து காலை, மாலை, இரவு மூன்று வேளையும் தொடர்ந்து மூன்று நாட்கள் அருந்தி வர சிறுநீரகக்கல் நீங்கி விடும். **தர்ப்பை புல்** | |
| | **ரணகள்ளிச் செடி** ❖ ரணகள்ளிச் செடி இலை ஒன்றை காலையில் மென்று 100 மி.லி நீர் தொடர்ந்து மூன்று நாட்கள் அருந்தி வரலாம். | |
| | ❖ முதல் நாள் மாலையில் இளநீரில் துளையிட்டு 1 தேக்கரண்டி கருஞ்சீரகம் இட்டு இரவு முழுவதும் ஊற வைத்து காலை எழுந்ததும் அருந்தவும். | |
| | ❖ சிறுகண்பீளைச் செடி ஒரு கைப்பிடியளவு எடுத்து கருஞ்சீரகம் சேர்த்து கசாயம் அருந்தலாம். அல்லது சிறுகண்பீளை பொடி 1 தேக்கரண்டி, நெருஞ்சில் பொடி 1 தேக்கரண்டி வெந்நீரில் கலந்து அருந்தவும்.<br>**சிறுகண்பீளை** **நெருஞ்சில்** **கருஞ்சீரகம்** | |

### 7. நரம்பு முடிச்சு நோய் (VERICOSE VEIN) நீங்க

**மருத்துவம்**

- ❖ குப்பைமேனி இலையுடன் சிறிது மிளகு சேர்த்து உருண்டையாக்கி காலை வெறும் வயிற்றில் உண்ணவும்.

குப்பைமேனி

- ❖ புற்று மண் , களிமண் (கல் நீக்கி) அரைத்து வெயிலில் காய வைத்து வெள்ளைத்துணியில் சலிக்கவும்.இம்மாதிரி மூன்று முறை செய்யவும்.இதனுடன் நாட்டுக்கோழி முட்டையின் வெள்ளைக் கரு, பிரண்டை, புளி, மஞ்சள் தூள் கலந்து அரை மணி நேரம் வெயிலில் காய வைக்கவும்.இதனை வெரிகொஸ் வெயினில் தொடர்ந்து 1 வாரம் மேல்பூச்சாக பயன்படுத்தவும்.
- ❖ சிப்ரஸ் எண்ணெய் அல்லது அத்திப்பால் இரவில் தூங்கும் முன் தடவி வரலாம்.



### 8. வாந்தி மற்றும் வயிற்றுப்போக்கு நீங்க

**மருத்துவம்**

- ❖ 2 எலுமிச்சம்பழச்சாற்றுடன் வெந்நீர் மற்றும் தேன் கலந்து அருந்தவும் . ஒரு மணி நேரம் கழித்து லேசான உணவு எடுத்துக் கொள்ளவும்

எலுமிச்சை

தேன்

- ❖ ஓமம்- 1 தேக்கரண்டி, பெருங்காயம்-½ தேக்கரண்டி, ஜாதிக்காய்ப்பொடி - ½ தேக்கரண்டி, கல் உப்பு அல்லது இந்துப்பு பொடி - ½ தேக்கரண்டி நீரில் கொதிக்க வைத்து காலை, மாலை மற்றும் இரவு அருந்தவும்.
- ❖ **குழந்தைகளுக்கு ஏற்படின் ¼ தேக்கரண்டி ஜாதிக்காய்ப்பொடியை தாய்ப்பால் அல்லது பசும்பாலில் கொடுக்கவும்.**

ஓமம்

ஜாதிக்காய்

### 9. முகத்தில் மங்கு மறைய

**மருத்துவம்**

சந்தனத்துடன் ஜாதிக்காயை பன்னீரில் அல்லது தேனில் குழைத்து முகத்தில் 30 நிமிடங்கள் வரை தினமும் பூசி வர மங்கு மறைந்து முகம் பொலிவு பெறும்.

சந்தனம்

ஜாதிக்காய்

| 10. நெஞ்செரிச்சல் நீங்க | |
|---|---|
| உணவுமுறை | ❖ அமிலத்தன்மை அதிகமான உணவுகளை தவிர்க்கவும். முக்கியமாக டீ, காஃபி தவிர்க்கவும். பதிலாக சுக்கு கசாயம் அருந்தவும். |
| | ❖ மணத்தக்காளி அல்லது அகத்திக்கீரை வாரத்திற்கு மூன்று நாள் உணவில் சேர்த்துக் கொள்ளவும். மணத்தக்காளி அகத்திக்கீரை |
| மருத்துவம் | ❖ ஓமம், பெருங்காயம், இந்துப்பு, சோம்பு நீரில் கொதிக்க வைத்து உணவிற்குப் பின் எடுத்துக் கொள்ளவும். |
| | ❖ மாலையில் அதிமதுரப்பொடி 1 தேக்கரண்டி வெந்நீரில் கலந்து அருந்தவும். அதிமதுரம் |

| 11. நகச்சுற்றி நீங்க | |
|---|---|
| மருத்துவம் | இரவில் மருதாணி இலையுடன் சிறிது சுண்ணாம்பு கலந்து நகச்சுற்றி மீது இட்டு வர குணமடையும். மருதாணி |

| 12. மூக்கடைப்பு, மூக்கில் நீர் வடிதல் | |
|---|---|
| மருத்துவம் | இரண்டு வெற்றிலை, ஒரு துண்டு சுக்குடன் ஒரு தேக்கரண்டி மிளகுத்தூள் சேர்த்து காய்ச்சி வடிகட்டி இளஞ்சூட்டில் மிளகுத்தூளோடு குடிக்கவும்.பின்பு மஞ்சளை நெருப்பில் சுட்டு வரும் புகையை உள்ளிழுக்கவும். வெற்றிலை சுக்கு மிளகு மஞ்சள் |

## 13. மூச்சுத்திணறல், ஆஸ்த்மா நீங்க

**மருத்துவம்**

❖ 250 மி.லி நீரில் புதினா - 1 கைப்பிடி அளவு, செம்பருத்தி பூ - 3, திப்பிலி - 2 அல்லது 3, சுக்கு - 2, மிளகுத்தூள் - ½ தேக்கரண்டி இட்டு 100 மி.லி ஆகும் வரை காய்ச்சி காலை மற்றும் மாலை அருந்தவும்.

புதினா



செம்பருத்தி



திப்பிலி



❖ தூதுவளைப் பொடி - 1 தேக்கரண்டி, முசுமுசுக்கைப்பொடி - 1 தேக்கரண்டி, சுக்கு, மிளகு, திப்பிலியுடன் நீரில் கொதிக்க வைத்தும் அருந்தலாம்.

தூதுவளை



முசுமுசுக்கை



சுக்கு



மிளகு





## 14. டான்சில்ஸ் பிரச்சனைக்கு

**மருத்துவம்**

❖ பூண்டை அரைத்து தேன் கலந்து மேல் பூச்சாக டான்சில் இருக்கும் இடத்தில் ஒவ்வொரு 3 மணி நேரத்திற்கும் தடவி வரவும்.

பூண்டு



❖ .தேங்காய் துருவலுடன் பூண்டு, பனங்கற்கண்டு சேர்த்து ஒரு நாளுக்கு மூன்று வேளை எடுத்துக் கொள்ளவும்



தேங்காய்

| 15. தலை வலி, ஒற்றை தலைவலி நீங்க | |
|---|---|
| மருத்துவம் | சுக்கை தண்ணீரில் கொதிக்க வைத்து வடிகட்டி எலுமிச்சை சாறு மற்றும் பனங்கற்கண்டு அல்லது கருப்பட்டி கலந்து அருந்தவும்.<br><br>**(குறிப்பு - ஒற்றை தலைவலியெனில் குடல் சுத்தி செய்த பின் 1 மணி நேரம் கழிந்த பின் சுக்கு கசாயம் எடுத்துக் கொள்வது உகந்தது.)**<br>அதன் பின், மஞ்சள் - 1 கரண்டி, சுண்ணாம்பு - ¼ தேக்கரண்டி கலந்து நெற்றிப் பகுதியில் பற்று இட்டு உறங்கவும்.<br>சுக்கு  மஞ்சள்  |

| 16. முகப்பரு நீங்க | |
|---|---|
| மருத்துவம் | ❖ சந்தனம், ஜாதிக்காய் தண்ணீரில் குழைத்து முகத்தில் பூசி வரவும்.<br>சந்தனம்  ஜாதிக்காய்  |
| | ❖ திருநீற்றுப்பச்சிலை எண்ணெய் ஒரு அரை மணி நேரம் முகத்தில் தடவலாம்.<br>திருநீற்றுப்பச்சிலை  |

| 17. குடல் புழு நீங்க | |
|---|---|
| மருத்துவம் | ❖ காலையில் மூன்று அல்லது நான்கு சுண்டை வற்றல் உண்ணவும்.<br> சுண்டை வற்றல் |
| | ❖ வாய்விடங்கம் லேசாக வறுத்து பொடி செய்து காலை மற்றும் இரவில் 1 தேக்கரண்டி வெந்நீரில் கலந்து மூன்று நாட்கள் அருந்தி வரவும்.<br>வாய்விடங்கம்  |

| 18. பொடுகுத் தொல்லை நீங்க | | |
|---|---|---|
| மருத்துவம் | ❖ தேங்காய் எண்ணெய்க்கு பதிலாக பொடுதலை தைலம் பயன்படுத்தலாம். | பொடுதலை |
| | ❖ சிறிய வெங்காயச்சாறுடன் முட்டையின் வெள்ளைக் கரு சேர்த்து தலையில் தேய்த்து 30 நிமிடங்கள் கழித்து சீயக்காய் அல்லது அரைப்புத்தூள் இட்டு வாரத்திற்கு 3 முறை குளித்து வரலாம் | சிறிய வெங்காயம் |
| | ❖ கொய்யா இலைச்சாறுடன் சிறிது வசம்புத்தூள் கலந்து தலையில் தேய்த்து 30 நிமிடங்கள் கழித்து குளித்து வரலாம் | கொய்யா இலை |
| | ❖ அருகம்புல் சாறுடன் நல்லெண்ணெய் கலந்து தலையில் தேய்த்து 30 நிமிடங்கள் கழித்து சீயக்காய் அல்லது அரைப்புத்தூள் இட்டும் குளித்து வரலாம். | அருகம்புல் |

| 19. முகத்தில் மரு மறைய | | |
|---|---|---|
| மருத்துவம் | ❖ அம்மன்பச்சரிசியை உடைக்க, அதிலிருந்து வரும் பாலை தடவி வரவும். | அம்மன்பச்சரிசி |
| | ❖ அரிசித்திப்பிலியை பொடி செய்து தேனில் கலந்து 4 அல்லது 5 நாட்கள் தடவி வர மரு மறைந்து விடும். | அரிசித்திப்பிலி |

## 20. கூந்தல் தொடர்பான பிரச்சனைகள் நீங்க

**மருத்துவம்**

1 லி. சுத்தமான செக்கு தேங்கெண்ணெயில் வெட்டி வேர், கருஞ்சீரகம், நெல்லி வற்றல் ,செம்பருத்தி பூ 3 அல்லது 4, வெள்ளை கரிசலாங்கண்ணி - 30 கி., மருதாணி இலை - 30 கி., கறிவேப்பிலை - 30 கி. சாறு எடுத்து கலந்து காய்ச்சி கருப்பு நிறத்தில் தைலம் பதம் வந்ததும் வடிகட்டி பயன்படுத்தவும். தயாரிக்க முடியாதவர்கள் நீலிபிருங்காதி தைலம் அல்லது கரிசலாங்கண்ணி தைலம் வாங்கி பயன்படுத்தலாம்.

**வெட்டி வேர்**



**கருஞ்சீரகம்**



**நெல்லி வற்றல்**



**செம்பருத்தி**



**மருதாணி**



**வெள்ளை கரிசலாங்கண்ணி**



**கறிவேப்பிலை**



## 21. குடல் இறக்கம்

**மருத்துவம்**

- முட்டை வெள்ளைக் கரு அல்லது வெண்ணெயுடன் கலச்சிக்காய்ப்பொடி ஒரு தேக்கரண்டி கலந்து காலை வெறும் வயிற்றில் உண்ணவும்

**கலச்சிக்காய்**



- இரவில் ½ அல்லது 1 தேக்கரண்டி கடுக்காய்ப்பொடியுடன் தேன் கலந்து எடுத்துக் கொள்ளவும்.

**கடுக்காய்**



- மதியம் கீரைச் சார்ந்த உணவுகள் உண்ணவும்

| 22. வாயு மற்றும் புளித்த ஏப்பம் | |
|---|---|
| தவிர்க்க | டீ , காஃபி, வெள்ளைச் சர்க்கரை , தோசை மற்றும் புளிச் சார்ந்த உணவுகள். |
| மருத்துவம் | ❖ காலை, மாலை மற்றும் இரவு உணவுக்கு பின் ஓமம் - 1 தேக்கரண்டி, பெருங்காயம்- ¼ தேக்கரண்டி சிறிது இந்துப்பு, கொதிக்க வைத்து உணவிற்குப் பின் எடுத்துக் கொள்ளவும். ஓமம் |
| | ❖ காலை, மாலை மற்றும் இரவு உணவுக்கு பின் அஸ்டசூரணம் ஒரு தேக்கரண்டி வெந்நீரில் கலந்து எடுத்துக் கொள்ளலாம். அல்லது அஸ்டசூரணம் ஒரு தேக்கரண்டியுடன் நல்லெண்ணெய் சேர்த்து மதிய சாப்பாட்டுடன் உண்டால் வாயுத்தொல்லை நீங்கி பயன்பெறலாம். |

| 23. கர்ப்பிணிப் பெண்களுக்கான உணவுமுறை | |
|---|---|
| உணவுமுறை | ❖ கீரைச்சார்ந்த உணவுகள் (முருங்கை, பொன்னாங்கண்ணி, கரிசலாங்கண்ணி) உட்கொள்ளவும்<br>முருங்கை பொன்னாங்கண்ணி கரிசலாங்கண்ணி |
| | ❖ காலை மற்றும் மாலையில் பாலில் குங்குமப்பூ, பனங்கற்கண்டு கலந்து அருந்தவும். குங்குமப்பூ |
| மருத்துவம் | ❖ மாதுளங்காய் ரசாயனம் காலை மற்றும் மாலை உணவிற்குப் பின் ஒரு தேக்கரண்டி அருந்தவும். |
| | ❖ இரவு தூங்கும் முன் ரோஜா குல்கந்து பாலில் அல்லது வெந்நீரில் ஒரு தேக்கரண்டி கலந்து அருந்தவும். ரோஜா குல்கந்து |

| 24. மூட்டு வலி, இடுப்பு வலி | |
|---|---|
| **உணவுமுறை** | ❖ முருங்கைக்கீரை சூப் (வாரம் 3 முறை)<br>❖ பவளமல்லி இலைக் கசாயம்<br>❖ உளுத்தங்கஞ்சி அல்லது உளுந்தங்களி |
| **மருத்துவம்** | வாதசஞ்சீவி தைலம் அல்லது வாதகேசரி தைலம் அல்லது உளுந்து தைலத்தை சூடாக்கி இரண்டு அல்லது மூன்று கற்பூரத்தைக் குழைத்து தேய்த்து வர இடுப்பு வலி நீங்கும். |

| 25. கொழுப்புக்கட்டி நீங்க | |
|---|---|
| **மருத்துவம்** | ❖ இரவு உறங்கும் முன் நொச்சியத்தைலம் கொழுப்புக்கட்டி இருக்கும் இடத்தில் தடவி வரவும்.<br>**நொச்சி இலை** |
| | ❖ விளக்கெண்ணெயுடன் சுண்ணாம்பு, மஞ்சள் கலந்து கொழுப்புக்கட்டி இருக்கும் இடத்தில் தடவி வரவும்.<br>**மஞ்சள்** |
| | ❖ நாட்டு மருந்துக் கடைகளில் கிடைக்கும் மைசாச்சியுடன் முட்டை வெள்ளைக்கரு கலந்து கொழுப்புக்கட்டிக்கு மேல்பூச்சாக பயன்படுத்தவும். |

| 26. ஹீமோகுளோபின் அதிகரிக்க | |
|---|---|
| **உணவுமுறை** | ❖ பத்து பேரிச்சம்பழங்களை முதல் நாள் இரவில் ஊற வைத்து காலையில் அந்நீரை அருந்தவும். ஊற வைத்த பேரிச்சம்பழங்களை நீர் சேர்த்து அரைத்து தேன் கலந்து அருந்தி வரவும்.<br>❖ மாதுளம்பழம் எடுத்துக்கொள்ளவும்.<br>❖ வாரம் 2 அல்லது 3 முறை முருங்கைக்கீரை சூப் அருந்தவும்.<br>❖ இரவு உறங்கும் முன் 10 அல்லது 15 கருப்பு உலர் திராட்சை எடுத்துக்கொள்ளவும்.<br>**பேரிச்சம்பழம்** **மாதுளை** **முருங்கை** **உலர் திராட்சை** |

| 27. சொரியாசிஸ் நோய் | |
|---|---|
| **உணவுமுறை** | ❖ அசைவ உணவு முற்றிலும் தவிர்க்கவும்.<br>❖ வாரம் 3 முறை பிரண்டைத் துவையல் உணவில் சேர்ப்பது மிக நன்று.<br>❖ டீ, காஃபி, சர்க்கரை, புளி, கத்தரிக்காய், பூசணிக்காய் மற்றும் பாகற்காய் தவிர்க்கவும். |
| **மருத்துவம்** | ❖ காலை மற்றும் மாலையில் பறங்கிப்பட்டை சூரணம் அரைத்தேக்கரண்டி, சிவனார் வேம்பு சூரணம் அரைத்தேக்கரண்டி வெந்நீரில் கலந்து உட்கொள்ளவும். (**குடல் சுத்தி செய்த பின் இதனை உட்கொண்டால் நல்ல பயன் தரும்**)<br>❖ இரவு தூங்கும் முன் நிலவாகை சூரணம் ஒரு தேக்கரண்டி வெந்நீரில் கலந்து அருந்தவும்.<br>❖ வெப்பாலைத் தைலம் மேல்பூச்சாக தடவி வரலாம். |



| 28. ஹைப்போதைராய்டு & ஹைப்பர்தைராய்டு | |
|---|---|
| **உணவு முறை** | ❖ ஹைப்போதைராய்டு - உணவில் அயோடைஸ்டு உப்பு எடுத்துக் கொள்ளவும்.<br>❖ ஹைப்பர்தைராய்டு - உணவில் இந்துப்பு எடுத்துக் கொள்ளவும்.<br>❖ மதிய உணவில் கரிசலாங்கண்ணி, மணத்தக்காளி கீரை சேர்க்கவும்.<br>❖ முருங்கைக் கீரை சூப் |
| **தவிர்க்க** | டீ, காஃபி, சர்க்கரை |
| **மருத்துவம்** | காலை மற்றும் மாலை உணவுக்கு பின் கஞ்சனாராகுக்லு மாத்திரை ஒன்று எடுத்துக் கொள்ளவும். |
| | காலை மற்றும் மாலை பசும்பாலில் அஸ்வகந்த சூரணம் - 1 தேக்கரண்டி, பனைவெல்லத்துடன் அருந்தவும். |

| 29. காய்ச்சல் (டெங்கு, சிக்குன்குனியா) | |
|---|---|
| **மருத்துவம்** | நிலவேம்புக் கசாயம் - 1 கரண்டி, பர்படாகம் - ½ தேக்கரண்டி, திப்பிலி - 2 அல்லது 3, சுக்கு - 1 துண்டு, விஷ்ணுகிராந்தை - ½ தேக்கரண்டி, மிளகுத்தூள் - ½ தேக்கரண்டி, பூண்டு - 2 பல் இவற்றை 250மிலி நீரில் இட்டு 100 மிலி ஆகும் வரை கொதிக்க வைத்து காலை மற்றும் மாலையில் அருந்திவரவும்.<br>**நிலவேம்பு** **பர்படாகம்** **திப்பிலி** **விஷ்ணுகிராந்தை** |

| 30. சிறுநீரகம் செயலிழப்பு, கால் வீக்கம் , NEPHROSIS SYNDROME | |
|---|---|
| உணவுமுறை | ❖ முடக்கத்தான், மூக்கிரட்டை, கரிசலாங்கண்ணி,பொன்னாங்கண்ணி கீரைகளை சேர்த்துக் கொள்ளவும்.<br>முடக்கத்தான் மூக்கிரட்டை கரிசலாங்கண்ணி பொன்னாங்கண்ணி |
| | ❖ அசைவ உணவு தவிர்க்கவும்.<br>❖ டீ, காஃபி, அயோடைஸ்டு உப்பு, இளநீர், வாழைத்தண்டு தவிர்க்கவும்<br>❖ உணவில் இந்துப்பு பயன்படுத்தவும் |
| மருந்துவம் | ❖ பூனை மீசை மூலிகை - 1 கைப்பிடி , மூக்கிரட்டைக்கீரை - 1 கைப்பிடி, சிறிது கருஞ்சீரகத்துடன் 250மிலி நீரில் இட்டு 100மிலி ஆகும் வரை கொதிக்க வைத்து காலை வெறும் வயிற்றில் மற்றும் மாலையில் அருந்திவரவும்<br>பூனை மீசை மூலிகை |
| | ❖ இரவில் அருகம்புல் 1 கைப்பிடி, தர்ப்பைபுல் 1 கைப்பிடி கசாயம் செய்து அருந்தி வரவும்.<br>தர்ப்பைபுல் |

| 31. இருமல் நீங்க | |
|---|---|
| மருத்துவம் | வறட்டு இருமல் நீங்க அதிமதுரப்பொடியில் சிறிது மிளகுத்தூள் தேன் கலந்து உட்கொள்ளவும்.<br>அதிமதுரம் |
| | சளி இருமல் நீங்க ஏலாதிசூரணம் 1 தேக்கரண்டி வெந்நீரில் எடுத்துக்கொள்ளவும். |

| 32. உடல் எடை அதிகரிக்க | |
|---|---|
| உணவுமுறை | ❖ வாழைப்பழம், உருளைக் கிழங்கு உண்ணலாம். |
| | ❖ வாரம் இருமுறை முளைக் கட்டிய எள் உணவில் சேர்க்கவும் அல்லது எள் சூப் அருந்தி வரலாம். எள் |
| மருத்துவம் | ❖ வெண்பூசணி லேகியம் ½ தேக்கரண்டி, பசுநெய் ½ தேக்கரண்டியில் கலந்து காலை, மாலை மற்றும் இரவில் உண்டு வரவும் வெண்பூசணி |



| 33. உடல் எடை குறைய | |
|---|---|
| உணவுமுறை | ❖ இரவில் அரிசி உணவு தவிர்க்கவும்.<br>❖ 2 அல்லது 3 முறை எலுமிச்சை சாறு அருந்தலாம். |
| | குடம்புளி<br>❖ ரசத்தில் புளிக்கு பதிலாக குடம்புளி பயன்படுத்தவும். |
| | ❖ வாரம் இருமுறை கொள்ளு சூப் எடுத்துக் கொள்ளவும். கொள்ளு |
| மருத்துவம் | ❖ காலை வெறும் வயிற்றில் அருகம்புல் சாறு தேன் கலந்து அருந்தவும்.<br>❖ எலுமிச்சை சாறுடன் மஞ்சள் தூள், தேன் கலந்து அருந்தலாம். |
| | ❖ ஆலிவிதை வறுத்து பொடி செய்து, 1 கரண்டி பொடியை மோர் அல்லது வெந்நீரில் கலந்து இரவில் அருந்தி வரவும் ஆலிவிதை |

| 34. மஞ்சள்காமாலை | |
|---|---|
| உணவு முறை | உப்பில்லா கஞ்சி |
| தவிர்க்க | டீ, காஃபி, உப்பு, அசைவ உணவுகள், எண்ணெய், புளி |
| மருத்துவம் | கீழாநெல்லி அல்லது மஞ்சள் கரிசலாங்கண்ணி சாறு அரை டம்ளர் எடுத்து பசுமோர் அரை டம்ளர் கலந்து முறையே காலை வெறும் வயிற்றில், 12 மணியளவில், மாலை 4 மணியளவில் மற்றும் இரவு தூங்கும் முன் அருந்தவும்.<br>கீழாநெல்லி<br>மஞ்சள் கரிசலாங்கண்ணி |

| 35. மாதவிடாய் பிரச்சனைகள் நீங்க | |
|---|---|
| உணவுமுறை | ❖ மதியம் கீரை உணவுகள் உண்ணவும்.<br>❖ சோற்றுக்கற்றாழை எடுத்துக் கொள்ளவும்<br>சோற்றுக்கற்றாழை |
| மருத்துவம் | ❖ காலையில் அசோகப்பட்டை 1 கரண்டி வெந்நீரில் கலந்து அருந்தி வரவும்.<br>அசோகப்பட்டை |

| 36. கர்ப்பப்பை நீர்க்கட்டிகள் (PCOD), மாதவிடாய் பிரச்சனைகள், TUBULAR BLOCK, BULKY UTERUS | |
|---|---|
| மருத்துவம் | கலச்சிக்காய் பொடியுடன் சிறிது மிளகு தூள் மற்றும் தேன் சேர்த்து காலை மற்றும் மாலை 48 நாட்கள் எடுத்து வரவும். விரைவில் குணமடையும். அறுவை சிகிச்சை தேவையில்லை.<br>கலச்சிக்காய் |

| 37. எலும்பு தேய்மானப்பிரச்சனைகள் நீங்க | |
|---|---|
| உணவு முறை | ❖ சர்க்கரைக்கு பதிலாக பனைவெல்லம் பயன்படுத்தவும்<br>❖ உளுந்தங்கஞ்சி, உளுந்தங்களி, மரவள்ளிக் கிழங்கு எடுத்துக் கொள்ளவும்.<br>❖ காலை உணவில் உளுந்து பயன்படுத்தவும். |
| | ❖ முருங்கைக்கீரை சூப் அருந்தவும் — முருங்கை |
| | ❖ பிரண்டைத் துவையல் உணவில் சேர்த்துக் கொள்ளவும். — பிரண்டை |
| மருத்துவம் | காலை மற்றும் இரவில் பசும்பாலில் அஸ்வகந்த சூரணம் 1 கரண்டி கலந்து அருந்தி வரவும். |

| 38. உள் மூலம், வெளி மூலம், ரத்த மூலம் | |
|---|---|
| உணவு முறை | ❖ சுடுசோற்றில் நெய்யில் வதக்கிய சிறிய வெங்காயம் சேர்த்து உண்ணவும்.<br>❖ கருணைக்கிழங்கு சாம்பார் உணவில் சேர்த்துக் கொள்ளவும். |
| மருத்துவம் | ❖ 100 மிலி விளக்கெண்ணெயுடன் 6 அல்லது 7 தேக்கரண்டி குப்பைமேனி சாறு சேர்த்து காய்ச்சி தைலப் பதம் வந்ததும் வடிகட்டி எடுத்துக் கொள்ளவும்.இத்தைலத்தை பசும்பாலில் அரை தேக்கரண்டி சேர்த்து காலை, மதியம், இரவு உணவுக்குப் பின் கொடுக்கவும்.விரைவில் குணமடையும். அறுவை சிகிச்சை தேவையில்லை. — குப்பைமேனி |
| | ❖ காலையில் வெறும் வெறும் வயிற்றில் துத்தி இலையுடன் வெங்காய்ச்சாறு கலந்து எடுத்துக் கொள்ளவும்.<br>❖ துத்தித் தைலம் வெளி மூலத்தின் மேல்பூச்சாக இரவு தூங்கும் முன் உபயோகிக்கவும். — துத்தி |

| 39. முடக்கு வாதம் | |
|---|---|
| உணவுமுறை | ❖ பாலில் குங்குமப்பூ கலந்து அருந்தவும்.<br>குங்குமப்பூ |
| | ❖ முடக்கத்தான் கீரை உணவில் சேர்த்துக் கொள்ளவும். |
| | ❖ அன்னாசி பழம் எடுத்துக் கொள்ளவும். |
| | ❖ காலை, மாலை சுக்கு கசாயம்<br>சுக்கு |
| மருத்துவம் | ஒரு கைப்பிடி பவளமல்லி இலை, பூண்டு, சுக்கு, மிளகு இவற்றை தண்ணீரில் கொதிக்க வைத்து வடிகட்டி, இதனை காலை வெறும் வயிற்றில் 48 நாட்கள் எடுக்கவும்.கை, கால், இடுப்பு வலிகளுக்கும் நல்ல பயன் தரும்.<br>பவளமல்லி |

| 40. சிறுநீர்ப்பாதைத்தொற்று | |
|---|---|
| மருத்துவம் | தினமும் காலையில் ஒரு தேக்கரண்டி நெருஞ்சில் பொடியை வெந்நீரில் கலந்து எடுத்து வரவும். |

| 41. வெள்ளைப்படுதல் | |
|---|---|
| மருத்துவம் | அருகம்புல் சாறுடன் தேன் கலந்து பருக ஒரே நாளில் குணமடையும்.<br>அருகம்புல் |

| 42. இரவில் தூக்கமின்மை | |
|---|---|
| மருத்துவம் | ❖ ஒரு தேக்கரண்டி ஜாதிக்காய் பொடியை பால் அல்லது வெந்நீரில் கலந்து அருந்தவும். பகல் தூக்கம் தவிர்க்கவும் <br> ஜாதிக்காய் |

| 43. காய்கறிகள் மற்றும் பழங்களின் நச்சுத்தன்மை நீக்க | |
|---|---|
| மருத்துவம் | 20கி புளியை நீரில் ஊற வைத்து, அந்நீரில் காய்கறிகள் மற்றும் பழங்களை 15 நிமிடங்கள் இட்டு அதன் பிறகு எடுத்துக் கொள்வதால், அதிலுள்ள நச்சுத்தன்மை நீங்கப்பெறுகிறது. <br> புளி |

| 44. பற்கூச்சம்,ஈறுகளில் இரத்தக் கசிவு | |
|---|---|
| மருத்துவம் | வேப்பம்பட்டை பொடி 1 பங்கு, கருவேலம்பட்டை பொடி 1 பங்கு, கடுக்காய் பொடி 1 பங்கு, இந்துப்பு ½ பங்கு, பச்சை கற்பூரம் 5 அல்லது 6 சேர்த்து பொடி செய்து பற்பொடியாக பயன்படுத்தவும். <br> வேப்பம்பட்டை கருவேலம்பட்டை கடுக்காய் இந்துப்பு |

| 45. யானைக்கால் நோய் | |
|---|---|
| உணவுமுறை | ❖ உணவில் வல்லாரைக் கீரை சேர்க்கவும். |
| மருத்துவம் | ❖ புற்று மண் , களிமண் (கல் நீக்கி) அரைத்து வெயிலில் காய வைத்து வெள்ளைத்துணியில் சலிக்கவும்.இம்மாதிரி மூன்று முறை செய்யவும்.இதனுடன் நாட்டுக்கோழி முட்டையின் வெள்ளைக் கரு, பிரண்டை, புளி, மஞ்சள் தூள் கலந்து அரை மணி நேரம் வெயிலில் காய வைக்கவும்.இதனை வெரிகொஸ் வெயினில் தொடர்ந்து 1 வாரம் மேல்பூச்சாக பயன்படுத்தவும். <br> ❖ வெள்ளைக்கக்கட்டான் எனும் வெள்ளை சங்கு பூவின் சம்மூலம் பொடி ½ தேக்கரண்டி, வல்லாரைப் பொடி ½ தேக்கரண்டி, மஞ்சள் தூள் ¼ தேக்கரண்டி காலை, மதியம், இரவு உணவுக்குப் பின் 1 டம்ளர் வெந்நீரில் எடுத்து வரவும் <br> ❖ மேல்பூச்சாக இதன் தைலத்தை தயாரித்து பயன்படுத்தவும். |

| 46. அல்சர் | | |
|---|---|---|
| உணவுமுறை | ❖ தேங்காய்ப் பால் அடிக்கடி எடுத்துக் கொள்ளவும். | தேங்காய் |
| | ❖ மணத்தக்காளி, அகத்தி கீரைகள் உணவாகவோ, சூப்பாகவோ உட்கொள்ளவும். | மணத்தக்காளி அகத்தி |
| தவிர்க்க | டீ, காஃபி, குளிர்ந்த நீர், ஐஸ்கிரீம், குளிர்பானங்கள், அதிக உப்பு, புளிப்பு, காரம் | |
| மருத்துவம் | **காலை** | மணத்தக்காளி சூப்புடன் தேங்காய்ப்பால் கலந்து பருகவும். |
| | **மாலை** | அதிமதுர சூரணம் ஒரு தேக்கரண்டி வெந்நீரில் கலந்து அருந்தவும். |
| | **இரவு தூங்கும் முன்** | திரிபலா சூரணம் ஒரு தேக்கரண்டி வெந்நீரில் கலந்து அருந்தவும். |
| | மாங்கொட்டையின் பருப்பைப் பொடி செய்து மணத்தக்காளிச் சாறுடன் உருண்டையாக்கி, அதை காலை, மாலை மற்றும் இரவு உணவுக்குப் பின் எடுத்துக் கொள்ளவும். | |

| 47. மூளைத்திறன் மற்றும் ஞாபகசக்தி வளர | | |
|---|---|---|
| உணவுமுறை | ❖ வாரம் மூன்று முறை வல்லாரைக் கீரை உணவில் சேர்த்துக் கொள்ளவும். | வல்லாரை |
| மருத்துவம் | ❖ பசும்பாலில் வல்லாரைப்பொடி - ½ தேக்கரண்டி, வசம்புப்பொடி - ¼ தேக்கரண்டி பனங்கற்கண்டுடன் கலந்து காலை மற்றும் மாலையில் அருந்தி வரவும். | வசம்பு |
| | ❖ இரவில் சங்குபுஷ்பி மாத்திரை ஒன்று எடுத்துக் கொள்ளவும். | |

| 48. இதய அடைப்பு மற்றும் வால்வு சுருக்கம் நீங்க | |
|---|---|
| உணவுமுறை | ❖ உணவில் செக்கில் ஆட்டிய நல்லெண்ணெய் பயன்படுத்தவும். |
| | ❖ தேனில் ஊற வைத்த பேரிச்சம்பழம் எடுத்துக் கொள்ளவும். ❖ தினமும் 1 வேளை நாட்டுச் சுரைக்காய் சாறு பருகி வரவும். பேரிச்சம்பழம் |
| தவிர்க்க | அசைவ உணவு தவிர்க்கவும் |
| மருத்துவம் | ❖ மருதம்பட்டை - 1 (சூரணம் எனில் 1 கரண்டி), செம்பருத்தி பூ - 3 பனங்கற்கண்டு நீரில் கொதிக்க வைத்து காலை மற்றும் மாலையில் அருந்தி வரவும். மருதம்பட்டை செம்பருத்தி பூ |
| | ❖ இரவில் வெண்தாமரைப் பொடி ஒரு கரண்டி வெந்நீரில் கலந்து அருந்தவும். வெண்தாமரை |

| 49. கால் ஆணி மற்றும் பித்த வெடிப்பு நீங்க | | |
|---|---|---|
| மருத்துவம் | கால் ஆணி | நவச்சாரம் 1 கி, சுண்ணாம்பு 1 கி, மஞ்சள் 10 கி எடுத்து அரைத்த மருதாணி இலையுடன் கலந்து இரவு தூங்கும் முன் பூசி வரவும். |
| | | நவச்சாரம் மஞ்சள் மருதாணி |
| | பித்த வெடிப்பு | ❖ காலை மற்றும் மாலையில் சுக்கு கசாயம் எடுத்துக் கொள்ளவும். சுக்கு |
| | | ❖ விளக்கெண்ணெயுடன் சுண்ணாம்பு, மஞ்சள் கலந்து இரவு தூங்கும் முன் பூசி வரவும். |

| 50. பித்தப்பை கல் நீங்க | |
|---|---|
| உணவுமுறை | ❖ கரிசலாங்கண்ணிக் கீரை உணவில் சேர்த்துக் கொள்ளவும்<br>கரிசலாங்கண்ணி |
| | ❖ வாரம் இருமுறை வாழைத்தண்டு கூட்டு அல்லது பொரியல் உண்ணவும் |
| | ❖ வாரம் ஒருமுறை இளநீர் எடுத்துக் கொள்ளவும்.<br>இளநீர் |
| தவிர்க்க | டீ, காஃபி, நொறுக்குத் தீனி வகைகள்,கொழுப்பு சார்ந்த உணவுகள், துரித உணவுகள், பிஸ்கட் போன்றவை தவிர்க்கவும். |
| மருத்துவம் | ❖ காலை மற்றும் மாலையில் கீழாநெல்லிப்பொடி ஒரு கரண்டி வெந்நீரில் கலந்து அருந்தி வரவும்.<br>கீழாநெல்லி |
| | ❖ இரவில் தூங்கும் முன் கடுக்காய்ப்பொடி அரைத்தேக்கரண்டி வெந்நீரில் கலந்து அருந்தவும்.<br>கடுக்காய் |

| 51. குழந்தைகளின் நோய் எதிர்ப்பு சக்தியை அதிகரிக்க | | |
|---|---|---|
| உணவுமுறை | | ❖ கீரை வகைகள் சேர்த்துக் கொள்ளவும்.<br>❖ நெல்லிக்காய் அதிக அளவு எடுத்துக் கொள்ளவும். |
| மருத்துவம் | காலை & மாலை | நாட்டு பசும்பால் அல்லது ஆட்டுப் பாலில் ½ தேக்கரண்டி அஸ்வகந்த சூரணம், பனங்கற்கண்டு சேர்த்து அருந்தவும். |
| | இரவு | பூண்டு பால் |

| 52. கிட்டப்பார்வை, தூரப்பார்வை, கண்புரை, பார்வை குறைபாடு | |
|---|---|
| உணவுமுறை | பொன்னாங்கண்ணி கீரை, கேரட், பப்பாளி எடுத்துக் கொள்ளவும்.<br>பொன்னாங்கண்ணி கேரட் பப்பாளி |
| மருத்துவம் | ❖ முருங்கைப் பூவை நிழலில் காய வைத்து பொடி செய்து கொள்ளவும். காலை மற்றும் மாலை ஒரு கரண்டி முருங்கைப் பொடியை பசும்பாலில் பனங்கற்கண்டு கலந்து பருகவும்.<br>முருங்கைப் பூ |
| | ❖ காலை மற்றும் இரவு தூங்கும் முன் நேத்திரபூண்டுத் தைலத்தை இரு சொட்டு வீதம் கண்ணில் விடவும்.<br>நேத்திரபூண்டு |
| | ❖ ஐந்து அல்லது ஆறு நந்தியாவட்டை பூக்களை நீரில் ஊற வைத்து காலை அந்நீரினால் கண்களை கழுவவும்.<br>நந்தியாவட்டை |
| | ❖ பஞ்சகல்ப குளியல் பொடி 1½ தேக்கரண்டி எடுத்து பசும்பாலில் காய்ச்சி, தலையில் தேய்த்து அரை மணி நேரம் குளித்து வரவும். (வாரம் இருமுறை) |



| 53. உடலில் உள்ள கெட்ட கொழுப்பை குறைக்க (LDL) | |
|---|---|
| உணவுமுறை | ❖ செக்கில் ஆட்டிய நல்லெண்ணெய் பயன்படுத்தவும்.<br>❖ தேனில் ஊற வைத்த பேரிச்சம்பழங்கள் எடுத்துக் கொள்ளவும். |
| மருத்துவம் | ❖ முளைகட்டிய வெந்தயப் பொடி 1 தேக்கரண்டி வெந்நீரில் கலந்து காலை மற்றும் மாலை எடுத்துக் கொள்ளவும்.<br>❖ இரவில் பூண்டு பால் அருந்தவும். |

| 54. தாய்ப்பால் சுரக்க | | |
|---|---|---|
| உணவுமுறை | காலை | ❖ உளுந்தங்களி அல்லது உளுந்தங்கஞ்சி<br>❖ வெந்தயக்களி அல்லது வெந்தயக்கஞ்சி |
| | மதியம் | முருங்கைக்கீரை, அகத்திக்கீரை உணவாக அல்லது சூப்பாக எடுத்துக் கொள்ளலாம்.<br>முருங்கைக்கீரை அகத்திக்கீரை |
| மருத்துவம் | ❖ காலை வெறும் வயிற்றில் அருகம்புல் சாறு தேன் கலந்து எடுத்துக் கொள்ளவும். | அருகம்புல்  |
| | ❖ சௌபாக்யசுண்டி ஒரு தேக்கரண்டி காலை மற்றும் மாலை உணவிற்குப் பின் பசும்பாலில் அல்லது வெந்நீரில் கலந்து எடுத்துக் கொள்ளவும். | |
| | ❖ இரவு தூங்கும் முன் பூண்டு பால் அருந்தவும். | பூண்டு  |

| 55. குளியல் பொடி | |
|---|---|
| மருத்துவம் | ❖ கடலை மாவு, பாசிப்பயறு, கிச்சிலி கிழங்கு, ஆவாரம்பூ ஆகியவற்றை பொடி செய்து பயன்படுத்தலாம்<br>❖ கடலை மாவை அருகம்புல் சாறுடன் பயன்படுத்தலாம்.<br>❖ நலங்கு மாவு பயன்படுத்தலாம். |

| 56. காதில் சீழ் வடிதல் | |
|---|---|
| மருத்துவம் | வேப்பெண்ணெயுடன் எட்டிக் கொட்டையைக் காய்ச்சி ஒன்று அல்லது இரண்டு சொட்டுகள் விடவும்.காதில் சீழ் வடிதல் நின்று விடவும். |

| 57. பேன் தொல்லை நீங்க | |
|---|---|
| மருத்துவம் | வேப்பெண்ணெயுடன் வசம்பு பொடி சேர்த்து அரை மணி நேரம் தலையில் தேய்த்து குளித்து வரவும். |

| 58. காசநோய் (T.B) | |
|---|---|
| **உணவு முறை** | ❖ அசைவ உணவு முற்றிலும் தவிர்க்கவும்<br>❖ டீ, காஃபி, சர்க்கரை, புளி, அதிக உப்பு, காரம் தவிர்க்கவும். |
| **மருத்துவம்** | ❖ 200மிலி நீரில் சீந்தில் கொடி 1 கைப்பிடி, முசுமுசுக்கை 1 கைப்பிடி, 2 அல்லது 3 திப்பிலியுடன் 2 வெற்றிலை இட்டு, 100 மிலி ஆகும் வரை நன்றாக கொதிக்க விட்டு, இதனை காலை மற்றும் மாலையில் அருந்தி வரவும்.<br>சீந்தில் கொடி, முசுமுசுக்கை, திப்பிலி, வெற்றிலை<br>❖ இரவு ஓரிதழ் தாமரைப் பொடி ஒரு தேக்கரண்டி வெந்நீரில் கலந்து அருந்தவும்.<br>ஓரிதழ் தாமரை |

| 59. வாய்ப்புண், நாக்குப் புண் நீங்க | |
|---|---|
| **உணவு முறை** | ❖ மணத்தக்காளி கீரை எடுத்துக் கொள்ளவும் (வாரம் இருமுறை) |
| **தவிர்க்க** | ❖ டீ, காஃபி, வெள்ளை சர்க்கரை, குளிர்பானங்கள் |
| **மருத்துவம்** | ❖ காலை எழுந்ததும் நல்லெண்ணெய் அல்லது தேங்காயெண்ணெயை பத்து நிமிடங்கள் வாயில் வைத்திருந்து கொப்பளித்து வரவும்.<br>❖ பப்பாளிப் பாலை மருந்தாக தடவி வரவும்.<br>❖ காலை, மதியம், இரவு உணவுக்குப் பின் அதிமதுரப்பொடி ½ தேக்கரண்டி தேனில் குழைத்து எடுக்கவும்.<br>❖ மாசிக்காய் பொடி 1 தேக்கரண்டி வெந்நீரில் கலந்து இரவில் தூங்கும் முன் வாய் கொப்பளித்து வரவும்.<br>மாசிக்காய் |

| 60. திக்கு வாய் | |
|---|---|
| மருத்துவம் | ❖ பசும்பால் அல்லது வெந்நீரில் வல்லாரைப் பொடி ½ தேக்கரண்டி, வசம்புப் பொடி ¼ தேக்கரண்டி, பனங்கற்கண்டு ¼ தேக்கரண்டி கலந்து காலை மற்றும் மாலை அருந்தி வரவும். |
| | ❖ நெருப்பில் சுட்ட வசம்பை தூள் செய்து தேனில் குழைத்து தூங்கும் முன் நாவில் தடவி வரவும். |



| 61. கொழுப்பு படிந்த கல்லீரல் (Fatty Lever Problem) | |
|---|---|
| உணவு முறை | ❖ டீ, காஃபி, வெள்ளை சர்க்கரை, நெய், வெண்ணெய், அசைவ உணவுகள் மற்றும் ஆல்கஹால் தவிர்க்கவும்.<br>❖ மதிய உணவில் கரிசலாங்கண்ணி, பொன்னாங்கண்ணி கீரைகள் எடுத்துக் கொள்ளவும். |
| மருத்துவம் | ❖ கீழாநெல்லிப் பொடி அல்லது கரிசலாங்கண்ணி பொடி 1 தேக்கரண்டி வெந்நீரில் கலந்து எடுத்துக் கொள்ளவும். அல்லது கீழாநெல்லிச் சாறெனில் தேன் கலந்து உண்ணவும்.<br>கீழாநெல்லி  கரிசலாங்கண்ணி  |
| | ❖ இரவில் திரிபலா சூரணம் 1 தேக்கரண்டி வெந்நீரில் கலந்து எடுத்துக் கொள்ளவும். |

| 62. உடல் உஷ்ணம் குறைய | |
|---|---|
| உணவு முறை | ❖ காலை 11 மணியளவில் அல்லது மாலையில் கேழ்வரகு கஞ்சி<br>❖ மதிய உணவுக்குப் பின் காம்பு நீக்கிய வெற்றிலை சுண்ணாம்புடன் எடுத்துக் கொள்ளவும்.<br>❖ மதிய மற்றும் இரவு உணவுக்குப் பின் மோர் அருந்தவும்.<br>❖ மாலையில் இளநீர், சோற்றுக் கற்றாழை, பதனீர் அல்லது கரும்புச் சாறு எடுத்துக் கொள்ளவும். |
| மருத்துவம் | ❖ பாதாம் பிசின் அல்லது சப்ஜா விதைகளை இரவில் ஊற வைத்து, காலை வெறும் வயிற்றில் எடுத்துக் கொள்ளவும்.<br> பாதாம் பிசின்  சப்ஜா விதை |
| | ❖ இரவு தூங்குமுன் விளக்கெண்ணெயை தொப்புளில் தடவி வரவும்.<br>❖ கால் கட்டை விரல்கள் இரண்டிலும் சிறிது சுண்ணாம்பு வைத்து விட்டு உறங்கவும். |
| வாரம் ஒரு முறை நல்லெண்ணெய் குளியல் | |

| 63. தேமல் மறைய | |
|---|---|
| மருத்துவம் | ❖ வெற்றிலை, பூண்டுடன் மையாக அரைத்து தேமலில் அரை மணி நேரம் பூசி வரவும். |
| | ❖ காலை மற்றும் மாலை சூரியஒளியில் படுமாறு நடை பயிற்சி மேற்கொள்ளவும். |

| 64. சின்னம்மை, பெரியம்மை நோய் | |
|---|---|
| உணவு முறை | ❖ உப்பில்லா கஞ்சி உட்கொள்ளவும்.<br>❖ மதியம் அல்லது மாலையில் இளநீர், பதனீர் அல்லது திராட்சை எடுத்துக் கொள்ளவும்.<br>❖ பேயன் வாழைப்பழம் சிறந்த உணவு. |
| மருத்துவம் | ❖ காலை வெறும் வயிற்றில் 5 அல்லது 6 வேப்பிலைச் சாறுடன் மிளகுத் தூள் சேர்த்து அருந்தவும்.<br>வேப்பிலை |
| | ❖ இரவு தூங்குமுன் குங்குமப்பூவும், துளசியிலையும் அரைத்து உருண்டையாக்கி உண்ணவும்.<br>குங்குமப்பூ துளசி |
| ❖ **வேப்பிலைகளை படுக்கை மீது இடவும்.**<br>❖ **வேப்பிலை, மஞ்சள் மற்றும் சிவப்பு சந்தனம் அரைத்து மேல்பூச்சாக உபயோகிக்கவும்.** | |

| 65. இரத்த கட்டு, வீக்கம் | |
|---|---|
| மருத்துவம் | ❖ முதலில் இரத்தக்கட்டு உள்ள இடத்தில் பனிக்கட்டி ஒற்றடம் கொடுக்கவும்.. |
| | ❖ இரத்தபவளம் பொடி செய்து முட்டையின் வெள்ளைக் கருவுடன் கலந்து மேல்பூச்சாக பூசவும். (அல்லது)<br>❖ கரியபோளம் பொடியை முட்டையின் வெள்ளைக் கருவுடன் கலந்து மேல்பூச்சாக பூசவும். |

| 66. குதிகால் வலி நீங்க | |
|---|---|
| ❖ சரியான உடல் எடையை பராமரிக்கவும். (**பக்க எண்** - 16)<br>❖ மிருதுவான மற்றும் இலேசான காலணிகளை அணியவும். | |
| மருத்துவம் | ❖ எருக்கன் இலைகளை நல்லெண்ணெயில் காய்ச்சி மேல்பூச்சாக பூசவும்.<br>❖ சகஸ்ரதி அல்லது கற்பூராதி தைலத்தை சூடாக்கி 2 கற்பூரம் சேர்த்து பூசி வரவும். |

| 67. நாக்கில் சுவையின்மை நீங்க | | |
|---|---|---|
| **மருத்துவம்** | ❖ உணவிற்குப் பின் அஸ்டசூரணம் ½ தேக்கரண்டி வெந்நீரில் கலந்து அருந்தவும்.<br>❖ இரவு தூங்குமுன் 1 தேக்கரண்டி தேன் நாவில் தடவி வரவும். | **தேன்** |



| 68. ஆண்மை, நரம்பு தளர்ச்சி பிரச்சனைகள் நீங்க | |
|---|---|
| **உணவுமுறை** | ❖ உணவில் முருங்கைக் கீரைச் சேர்க்கவும். |
| **தவிர்க்க வேண்டியவை** | டீ, காஃபி, சர்க்கரை, அசைவ உணவுகள் மற்றும் மதுபானம் |
| **மருத்துவம்** | காலை, மாலை மற்றும் இரவில் பசும்பாலில் அஸ்வகந்த சூரணம் - ½ தேக்கரண்டி, ஓரிதழ் தாமரைப் பொடி - ½ தேக்கரண்டி, சிறிது பனைவெல்லத்துடன் கலந்து அருந்தவும். |

| 69. ஹெப்படைட்டிஸ் B பிரச்சனைகள் நீங்க | |
|---|---|
| **உணவுமுறை** | ❖ உணவில் கரிசலாங்கண்ணி,பொன்னாங்கண்ணி, மணத்தக்காளிக் கீரைகளை சேர்த்துக் கொள்ளவும். புளி சிறிதளவே பயன்படுத்தவும். |
| **தவிர்க்க வேண்டியவை** | டீ, காஃபி, சர்க்கரை, அசைவ உணவுகள் மற்றும் மதுபானம் |
| **மருத்துவம்** | ❖ 200 மிலி நீரில், கீழாநெல்லிப்பொடி 1 தேக்கரண்டி, கரிசலாங்கண்ணிப்பொடி ½ தேக்கரண்டி, மிளகுத்தூள் ½ தேக்கரண்டி, சுக்கு - 1, பூண்டு - 2 அல்லது 3 சேர்த்து 100மிலி ஆகும் வரை கொதிக்க வைத்து அருந்தி வரவும். |
| | ❖ இரவில் திரிபலா சூரணம் ½ தேக்கரண்டி வெந்நீரில் கலந்து எடுத்துக் கொள்ளவும். |

| 70. வெந்நோய் நீங்க | |
|---|---|
| **தவிர்க்க** | டீ, காஃபி, அசைவ உணவுகள் மற்றும் கத்தரிக்காய் |
| **மருத்துவம்** | ❖ கண்டங்கத்தரி வற்றலை நல்லெண்ணெயில் காய்ச்சி அதனை மேல்பூச்சாக பயன்படுத்தவும்.<br>❖ கார்போக அரிசியை 6 மணி நேரம் எலுமிச்சை சாறில் ஊற வைத்து, பின்பு சிறிது வறுத்து, பொடி செய்து, சிறிதளவு மஞ்சள் தூளுடன் சேர்த்து காலை மாலை எடுத்து வரவும். |
| | ❖ இரவில் வெள்ளெருகு சூரணம் ½ தேக்கரண்டி வெந்நீரில் கலந்து எடுத்துக்கொள்ளவும். |

| 71. முகத்தில் எண்ணெய்ப்பசை நீங்க | |
|---|---|
| மருத்துவம் | ❖ முல்தானிமட்டியை பாலில் குழைத்து அரைமணி நேரம் முகத்தில் தடவி வரவும். |

| 72. இரத்த வாந்தி நிற்க | |
|---|---|
| மருத்துவம் | ❖ அம்மன்பச்சரிசி அல்லது கீழாநெல்லி அல்லது இம்பூரல் ஏதேனும் ஒன்றின் சாற்றுடன் மோர் கலந்து குடிக்க இரத்த வாந்தி நிற்கும். |

| 73. பாம்புக் கடி மற்றும் வெறிநாய்க் கடி (RABIS) விஷ முறிவிற்கு | |
|---|---|
| மருத்துவம் | ❖ ஈஸ்வரமூலி பெருமருந்து மூலிகையை எடுத்து சிறிது மிளகு சேர்த்து அரைத்து நெல்லிக்காய் அளவு தொடர்ந்து 3 நாட்கள் காலை, மதியம், இரவு உணவுக்குப் பின் எடுத்து வரவும்<br>❖ மேல்பூச்சாக குப்பைமேனி இலையுடன் மஞ்சள் சேர்த்து பயன்படுத்தவும்.<br>(குறிப்பு : ஈஸ்வரமூலி வேரும் அனைத்து பாம்பு விஷத்தை முறிக்கும் ஆற்றல் உடையது . |

| 74. கண்கட்டி கரைய | |
|---|---|
| மருத்துவம் | ❖ நாமக்கட்டியை நீரில் குழைத்து மேல்பூச்சாக பயன்படுத்தவும். |

| 75. பக்கவாதம் , BRAIN TUMOUR | |
|---|---|
| மருத்துவம் | ❖ மருதம்பட்டை - 2 அல்லது 3, பூண்டு - 8 பல், எலுமிச்சைச் சாறு - 6 பழம், ஆப்பிள் வினிகர் - 200 மி.லி, தேன் - 200 மி.லி.<br>மருதம்பட்டையை நீரில் போட்டு நன்கு காய்ச்சி வடிகட்டி ஆறிய பின் அதில் பூண்டுச்சாறு, எலுமிச்சைச் சாறு, ஆப்பிள் வினிகர், தேன் கலந்து தயாரித்துக் கொள்ளவும். காலை வெறும் வயிற்றில் 1 டம்ளர் வெதுவெதுப்பான நீரில் 1 கரண்டி கலந்து அருந்தவும். காலை, மதியம், இரவு உணவுக்குப் பின் 15 நிமிடம் கழித்தும் அருந்தவும். |

| 76. குடிப்பழக்கம் நீங்க | |
|---|---|
| மருத்துவம் | ❖ 250 மி.லி. நீரில், கருப்பு உலர்திராட்சை 15 கி, சீந்தில் பொடி 1 தேக்கரண்டி, சிறிது கருப்பட்டியை 100 மி.லி. ஆகும் வரை கொதிக்க வைக்கவும். காலை வெறும் வயிற்றில் அருந்தி வரவும். |

| 77. பெண்கள் முகத்திலுள்ள தேவையற்ற முடி மறைய | |
| --- | --- |
| **மருத்துவம்** | ❖ சோற்றுக் கற்றாழைச் சாற்றுடன் 2 பல் பூண்டு, சிறிது பனங்கற்கண்டு கலந்து எடுத்துக் கொள்ளவும்.<br>❖ குப்பைமேனியுடன் மஞ்சள் சேர்த்து அரை மணி முகத்தில் பூசவும். |

| 78. ஒரு வயதிற்கு குறைவான குழந்தைகளுக்கு ஏற்படும் சளி நீங்க | |
| --- | --- |
| **மருத்துவம்** | ❖ பாலை நன்கு கொதிக்க வைத்து 2 பல் பூண்டை இடித்து தேன், மிளகுத் தூள் கலந்து கொடுக்கவும்.<br>❖ தேங்காய் எண்ணெயை சூடாக்கி 1 கற்பூரத்தை இட்டு மேல்பூச்சாக பூசவும்.<br>❖ வெற்றிலை, சிறிது மிளகு, 2 பல் பூண்டு நன்கு கொதிக்க வைத்து அரை சங்கு கொடுத்து வரவும். |





# fh MEET -2017





## CHENNAI

Date : 02-07-2017
Place : HOTEL PENTAGON

இயற்கை உணவும், சித்த மருத்துவமும்
சிறப்பான வாழ்விற்கு ஆதாரம்.
வாழ்க வளமுடன் நன்றி